## 36

# மன்னிப்பு

'நானும் வருகிறேன்' என்று ஜானகி சொன்னதும் திருஞானத்துக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

'நீயும் எங்கே வருகிறாய்?' என்று அவன் சீறி விழுந்தான்.

'நீங்கள் போகிற இடத்திற்கு' என்று ஜானகி சாவதானமாகப் பதில் சொன்னாள். அவள் அந்தச் சமயத்தில் அவ்வளவு அமைதியுடன் பேசியது அவன் ஆத்திரத்தை அதிகப்படுத்திற்று.

'நான் போகிற இடத்திற்கு நீ வர முடியாது; வரக்கூடாது!'

'வரமுடியாது என்பது இல்லை. வரக்கூடாது என்பது ஏன்?'

'உன் முகத்தைப் பார்க்க மாட்டார், அவர்'.

'அவர் பார்க்காவிட்டால் என்ன? நீங்கள் போய் அங்கே தனியாகத் திண்டாடுவதற்கு நானும்கூட வந்து ஒத்தாசையாக இருக்கக் கூடாதா?'

உன்னைப் பார்த்ததும் அவருக்கு இருக்கிற பிராமணனும் போய் விடும்.'

'அவர் என்னைப் பார்க்க வேண்டாமே. அவர் கண்ணில் படாமல் நான் இருந்து விடுகிறேன். அவ்வளவுதானே? நீங்களே கிட்ட இருந்து வேண்டியதைச் செய்யுங்கள். நான் தூர இருந்து கொண்டு உதவியாக இருக்கிறேன். நான் வரத்தான் செய்வேன், கட்டாயம். என் மாமனார் சாகுந் தறுவாயில் இருக்கிறார் என்றால் நான் இங்கே இருக்க முடியாது'.

திருஞானத்துக்கு அப்போது ஜானகி பிடிவாதம் பிடித்தது கொஞ்சமாவது பிடிக்கவில்லை. 'சாகிற தருணத்தில் கூடவா அங்கே சென்று தன் மனைவியுடன் காட்சியளித்து அவர் மனத்தைப் புண்படுத்த வேண்டும்?' என்று தயங்கினான். அவ்வளவு வருஷங்கள் பிரிந்திருந்தும் சாகப்போகிறார் என்ற தகவல் வந்ததும் அவனுக்குத் தகப்பனார்மேல் ஒரு கரையற்ற பிரேமையும் இரக்கமும் வந்தன. அவருடைய கோபத்தையும், பிடிவாதத்தையும், தன்னைப் பிள்ளையல்லவென்று அவர் நிராகரித்த கொடுமையையுங்கூட மறந்தான்.

பாரததேவி, *16.07.1939.*

'அவருடைய இஷ்டத்துக்கு விரோமாக நான் உன்னை மணந்து கொண்ட விஷயத்தை அவர் இன்னும் மறக்கவில்லை. ஆகையால் ஜானகி, நான் சொல்லுகிறேன், கேள்; நீ இங்கேயே இரு. நான் உனக்குத் தினம் ஒரு தந்தி அனுப்புகிறேன்.

'மாட்டேன்!'

'என்ன, இப்படிக் குழந்தை மாதிரிப் பிரிவாதம் செய்கிறாய்?'

'இப்போது, இது உங்களுக்குப் பிடிவாதமாகத் தோன்றும். அங்கே போனபிறகு சொல்லுவீர்கள் சரி, எப்போது வண்டி, நமக்கு? என்ன என்ன எடுத்துக்கொள்ள வேண்டும்?'

'உனக்கு வேலை செய்தே வாடிக்கையில்லையே; நீ அங்கே வந்து என்ன செய்யப்போகிறாய்? உபத்திரவந்தான் உன்னால்; உன்னைக் கவனிப்பதற்கே என்பொழுது சரியாகப் போகும்!'

'அதெல்லாம் ஒன்றும் ஆகாது. சாக்கெல்லாம் சொல்லவேண்டாம். என்னை அங்கே கூட்டிக் கொண்டு போக உங்களுக்குத் தைரியம் இல்லை. அதைச் சொல்லிவிடுங்கள்; நான் வரவில்லை'.

'அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீ வேண்டுமானால் வா. எனக் கொன்றும் ஆட்சேபனை இல்லை. மறு ரயிலில் நீயே திரும்பி வரப் போகிறாய்' என்று திருஞானம் அரைமனதாகச் சொன்னான்.

தேவராஜ முதலியார் பென்ஷன் வாங்கிக் கொண்ட டிப்டி கலெக்டர்; வைதிகப் பற்றுள்ளவர். தம் ஒரே பிள்ளையான திருஞானத்தை ஐ.ஸி. எஸ் ஸுக்குச் சீமைக்குப் போக அநுமதித்தார். ஆனால் அவன், ஜானகி க்ஷீரஸாகர் என்ற மராத்தியப் பெண்ணை மணந்தது, அவருக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. அவரால் ஆன மட்டும் தடுத்தார்; பயமுறுத்தினார். ஆனால் திருஞானம் ஜானகியை மணந்தே தீர்த்தான்; கிழவர் பிள்ளையை நிராகரித்துத் தன் சுயார்ஜிதச் சொத்து முழுவதையும் வேறு விதமாக விநியோகம் செய்துவிட்டார். பிள்ளையும் மருமகளை யும் பார்க்கக்கூட மறுத்துவிட்டார். தனியாகச் சென்னையில் ஒரு சிறு பங்களாவில் இருந்துவந்தார். அவர் மனைவி, திருஞானம் பி.ஏ படிக்கும் போதே இறந்து போய்விட்டாள். எனவே வீட்டில் சமையற்காரப் பையன்தான் இருந்தான்.

நியூமோனியா என்ற கபவாத ஜ்வரம் கண்ட இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகுதான் கிழவருக்குத் தெரியாமல் சமையற்காரன் திருஞானத்துக்குத் தந்தியடித்தான். அதற்குள்ளேயே கிழவருக்கு ஜ்வரவேகம் தாங்க முடியவில்லை. உடம்பு மூன்று நாட்களிலேயே இளைத்துத் துரும்பாகப் போய்விட்டது. கஞ்சிகூட அதிகமாகச் செல்ல வில்லை.

காலை ஆறரைமணிக்குத் திருஞானமும் ஜானகியும் பங்களாவிற்கு வந்து சேர்ந்தார்கள். சமையற்காரன் உள்ளே அழைத்துக்கொண்டு

போனான்.

தேவராஜ முதலியார் கட்டிலின் மேல் பிரக்ஞையற்றவர் போலக் கிடந்தார். மார்பில் கபக் கவசம் போட்டுப் பிளானல் சுற்றிக் கட்டியிருந்தது. அறை முழுவதும் நீலகிரித் தைல வாசனை நிறைந்திருந்தது.

திருஞானம் சந்தடி செய்யாமல் தகப்பனார் தலைமாட்டில் போய் உட்கார்ந்து கொண்டான். அவருடைய முகத்தைக் கண்டதும் அவன் பதறிப்போனான். ஆறு வருஷங்களுக்குள் அந்தப் பருத்ததேகம் எப்படிப் போயிருந்தது தெரியுமா?

சிறிது நேரம் கழித்து முணகிக்கொண்டு அவர் கண் திறந்தார். சிறிது நேரம் மகனை மருண்டு மருண்டு பார்த்தார். பிறகு கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. தம்முடைய வைராக்கியம் தடுமாறிப் பிள்ளையைப் கண்டதும் கலங்கினதை அவன் பார்க்கக்கூடாது என்று நினைத்தவர் போல அவனை வெளியே போகும்படிச் சமிக்ஞை செய்தார்.

'அப்பா, என்ன செய்கிறது உங்களுக்கு?' என்று திருஞானம் பரிவுடன் கேட்டான்.

'ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை, போ!' என்று கரகரத்த குரலில் பதற்றத்துடன் சொன்னார்.

அவருடைய கோபமும் வைஷம்மியமும் அப்பொழுது கூடக் குறையாததைக் கண்டு திருஞானம் திகைத்தான். உடல் வலிமை குன்றி, நோய் தலையெடுத்த அந்த நிலைமையிலாவது, அவர் தன்னை ஆவலுடன் வரவேற்பார் என்று அவன் எண்ணினான். வியாதியோ, கிட்டப்போகும் மரணமோ அவர் உறுதியைக் கலைத்ததாகத் தெரியவில்லை. அவர் கண்களில் ஜலம் வந்தது; ஆனால் அது நோயின் வேதனையில் ஏற்பட்டதாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தான் திருஞானம். அல்லது மனசு இளகியும் அதை வெளிக்காட்ட இஷ்டமின்றித் தான் அப்படிக் கடுகடுப்பாக இருக்க முயலுகிறாரோ என்று ஒரு சமயம் எண்ணினான்.

'யார் உனக்குத் தகவல் கொடுத்தது? துரோகிகள் சாகிறதற்கு முன்பு, உன்னை, நான் பார்க்க இஷ்டப்படவில்லை' என்று மிகவும் சிரமத்துடன் சொன்னார் முதலியார்.

ஆனால் அவர் சொன்னது ஒன்றும் அவன் காதில் ஏறவில்லை. அப்பொழுது அவர் மரணத்துடன் போராடும் காட்சிதான் அவன் புலனில் தாக்கிற்று. கிட்ட நெருங்கி மெதுவாக அவர் மார்பைத் தடவினான், மூச்சு, 'கர்கர்' என்று தடைப்பட்டு வருவது தெரிந்தது.

டாக்டர் வந்தார். நோயாளியைப் பரிசோதனை செய்துவிட்டுத் திருஞானம் பக்கம் திரும்பினார்.

'ஹிருதயம் பாதகம் இல்லை. ஆனால் சுவாசப் பைகளில் கபம் கட்டியிருக்கிறது. 'பாட்சு'கள் ரொம்ப இருக்கின்றன. இன்ஜெக்ஷன்

தருகிறேன். மருந்தை விடாமல் கொடுங்கள். இரவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; மார்புக்கும் கால்களுக்கும் விடாமல் தவிடு ஒற்றடம் கொடுக்க வேண்டும்' என்று சொல்லிவிட்டுத் திருஞானம் கேட்க வந்த கேள்வியைக்கூட எதிர் பாராமல் டாக்டர் வெளியே போனார்.

வராந்தாவில் ஜானகி டாக்டரை அணுகி நோயாளியின் நிலைமையைப் பற்றிக் கேட்டாள். அவளைக் கண்டு டாக்டர் கொஞ்சம் பிரமித்துப் போனார். ஒரு நிமிஷம் பரக்கப் பரக்க விழித்துவிட்டு, 'நிலைமை மோசந்தான். ஆனால் வெகு ஜாக்கிரதையாக நான் சொல்லுகிறபடி சிகிச்சை செய்துகொண்டு வந்தால் குணமாகலாம்' என்றார்.

'எப்படிச் செய்யச் சொல்கிறீர்களோ, செய்கிறோம்'.

'விவரமாக உள்ளே தகவல் கொடுத்திருக்கிறேன்'.

'அப்படியா! நல்லது'.

இரவு உடம்பு நிலை கவலைக்கிடமாகிவிட்டது. ஆனால் முனகலும் புரட்டலும் மட்டும் இருந்தன. பிரக்ஞையில்லாததால் ஜானகி தைரியமாக அருகில் சென்று உட்கார்ந்து சுச்ருஷை செய்து கொண்டிருந்தாள்.

காலையில் வந்தது முதற்கொண்டு அவள் பங்களாவைச் சீர்திருத்த ஆரம்பித்துவிட்டாள். பிறகு கிழவர் படுத்திருந்த அறையைச் சுத்தம் செய்து, அனாவசியமான பெஞ்சுகளையும் பீரோக்களையும் அப்புறப் படுத்தி, ஜன்னல்களை யெல்லாம் திறந்துவிட்டு, அறையில் சூரிய வெளிச்சம் படும்படிச் செய்தாள். பிறகு தான் கொண்டு வந்திருந்த மெத்தை தலையணை முதலியவற்றைச் சுத்தமான உறைகள் போட்டு விரித்து, மாமனாரைப் புதுப் படுக்கையில் படுக்க வைத்தாள். கண்ணில் படாமல் தூர இருந்துகொண்டு காலம் தவறாமல் மருந்தும் ஆகாரமும் கொடுக்கச் செய்தாள். இரவு பிரக்ஞையற்றுப்போன பிறகுதான் கிட்டெ வந்தாள்.

காலடியில் உட்கார்ந்துகொண்டு ஓயாமல் தவிடு ஒற்றடம் போட்டாள். மார்பிலும் பிளானலின்மேலும் ஒற்றடம் போட்டாள். கிழவர் ஜன்னியில் பிதற்றினார்.

'திருஞானம், உன்னைப் பார்த்ததே போதும்! ஜானகி – அவளைப் பார்க்க வேணும்போல் இருக்கிறது – ஆனால்... அதோ இருக்கிறாளே அவளா? வாம்மா! உன் வீட்டுக்கு வா! உன்னை உள்ளே நுழையாதே என்றேனே பாவி!'

அதைக் கேட்டதும் ஜானகிக்குத் துக்கம் தாங்கவில்லை. அவர் கால்களில் விழுந்து, 'மாமா, நான் கொடுத்து வைக்கவில்லை?' என்று அலறினாள்.

இந்தமாதிரி கபம் கட்டிய கரகரத்த குரலில் பிதற்றிக்கொண்டே இருந்தார். ஒரு மணி வரையில் ஜானகி கண் கொட்டாமல் உட்கார்ந்து கொண்டு சிகிச்சை செய்தாள். திருஞானம் கூடத் தலைமாட்டில்

உட்கார்ந்துகொண்டு தூங்கி விழுந்தான்.

'உங்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டு நான் இவ்வளவு நாள் தாமதித்தது தப்பு. இன்னும் முன்னால் வந்திருந்தேனானால் அவருக்கு ஒன்றுமில்லை; ஏக்கத்தாலேயே –பாவம்!' என்று அவள் சொல்லி மாமனாரின் முகத்தை, அப்பொழுது தான் திடீரென்று, அவ்வளவு வருஷங்கள் இல்லாமல் ஊற்றெடுத்துக் கிளம்பின அன்பின் பெருக்குடன் பார்த்தாள்.

'அவர்தான் உன் பேச்சையே–'

'அதெல்லாம், மனித ஹிருதயத்தின் விசித்திரப் போக்கு. உங்களுக்குத் தெரியாது; பெண்ணுக்குத்தான் தெரியும். நான் எதிரே வந்து நின்றிருந் தால் அவர் ஒன்றும் சொல்லியிருக்கமாட்டார். நான் அவரை ஜாக்கிரதை யாகப் பாதுகாத்துக் குழந்தைபோலக் கவனிக்கவேண்டிய வயசில், அநாதைபோல் அவர் தனியாக இருந்தால் உடம்புக்கு ஏன் வராது? அடடா எனக்கேன் புத்தி இப்படிப் போயிற்று?'

இரவு கழிந்து விடியற்கால வேளை, கிழவருடன் சேர்ந்து ஜானகி யும் மரணத்தை எதிர்த்துப் போராடினாள். கடைசியில் மயக்கம் கொஞ்சம் தெளிந்தது. அவர் கண் திறந்து பார்த்தார்.

காலடியில் உட்கார்ந்திருந்த ஜானகியைப் பார்த்ததும் வெடுக்கென்று கால்களை மேலே இழுத்துக்கொண்டார். அவர் பார்வையில் முதலில் ஒரு பீதி இருந்தது.

'அம்மா, என்னைக் காப்பாற்று!' என்று இரண்டு கைகளையும் எடுத்துக் கும்பிடப் போனார். ஜானகி சட்டென்று நெருங்கிக் கைகளைப் பிடித்துக்கொண்டு 'மாமா, உடம்பு சௌகரியமாகிவிட்டது; கவலைப் படாதீர்கள்!' என்றாள்.

கிழவர் எப்படியோ எழுந்து உட்கார்ந்து விட்டார். கீழே விழுந்து விடப்போகிறார் என்று ஏககாலத்தில் புருஷன் மனைவி இருவரும் இரண்டு புறங்களிலும் தோள்களைப் பிடித்துக் கொண்டார்கள்.

'குழந்தாய், உன் வீட்டுக்கு வந்தாயா? இனிமேல் எனக்கு ஒன்றும் இல்லை. பிழைத்து விட்டேன்! எனக்கு முன்னால் தெரியவில்லை யம்மா, எனக்கு என்ன வியாதியென்று'.

'படுத்துக் கொள்கிறீர்களா?' என்று ஜானகி முகமலர்ச்சியுடன் மெதுவாக அவரைப் படுக்க வைத்தாள்.

•